8th August 1960]

**THE HON. SRI C. SUBRAMANIAM**: ப்ரைமரி ஹெல்த் சென்டர்ஸ் வேறு. அது, திட்டம் போட்ட பிரகாரம் ஏற்பாடு செய்யப்பட்டு வருகிறது. ரூரல் டிஸ்பன்ஸரீஸ், அமைச்சர் அவர்கள் சொன்னதுபோல் இரண்டு விதத்தில் இருக்கின்றன. சர்க்கார் உதவி இல்லாமலேயே ஆங்காங்கிருக்கக்கூடிய ஜில்லா போர்ட்கள் அவைகளைத் திறக்க முடியும்.

**SRI N. R. THIAGARAJAN**: இரண்டாவது ஐந்தாண்டுத் திட்டத்தில் நடைபெறக்கூடியது என்று அச்சிடப்பட்ட புத்த கத்தில் போடப்பட்டிருக்கிறது. ப்ரைமரி ஹெல்த் சென்டர், தேனீ என்ற பெயரால் படத்தில் இருக்கிறது. அதுகூட திறக்கப் படவில்லை. மார்ச் 31 வரப் போகிறது. அதைக் கவனிப்பார்களா ?

**THE HON. SRI M. A. MANICKAVELU**: மூலக் கேள்வி ரூரல் டிஸ்பன்ஸரீஸ்-யைப் பற்றியது.

**SRI A. A. RASHEED**: May I know whether all these rural dispensaries have doctors and if not, how many of them have got doctors?

**THE HON. SRI M. A. MANICKAVELU**: I cannot give information now. But most of the rural dispensaries have got doctors. Probably one or two dispensaries may not have them.

**SRI M. K. SOMASUNDARAM**: ஜில்லா போர்டிற்கு ஏற்கனவே பணமில்லை. அவர்கள் எப்படி ஆஸ்பத்திரிகளைத் திறக்க முடியும்? திறக்கப்பட்ட ஆஸ்பத்திரிகளிலேயே மருந்து வாங்கிக் கொடுக்க முடியாத நிலை இருக்கும்போது ஜில்லா போர்ட் ஆஸ்பத்திரிகளை கவர்ன்மெண்ட் திறக்க முன்வருமா ?

**THE HON. SRI M. A. MANICKAVELU**: அப்பொழுதுள்ள சூழ் நிலையில் கவர்ன்மெண்ட் திறக்கிறது, ப்ரைமரி ஹெல்த் சென்டேர்ஸ். ரூரல் டிஸ்பன்ஸரீஸ் ஜில்லாபோர்ட் செய்ய வேண்டியது.

*Shark liver oil*

* 24 Q.—SRI A. VEDARATHNAM:
**SRI P. G. MANICKAM**: } கனம் ஸ்தல ஸ்தாபன அமைச்சர் அவர்கள் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்குப் பதிலளிப்பாரா ?

(அ) இம் மாநிலத்தில் மீன் எண்ணெய் தயாரிக்கும் தொழிற் சாலை இருக்கிறதா ? எங்கே இருக்கிறது ? எவ்வளவு எண்ணெய் உற்பத்தி செய்து வருகிறது ?

(ஆ) இல்லையானால், அத் தொழிற்சாலையை இம் மாநிலத்தில் ஏற்படுத்தும் உத்தேசம் உண்டா ?

(இ) அப்படியானால், எங்கே, எப்பொழுது?

[8th August 1960

THE HON. SRIMATHI LOURDHAMMAL SIMON : (அ) There are no factories in this State for the production of either shark liver oil or fish oil.

*(ஆ)* & *(இ)* There is no proposal at present to start factories for the production of shark liver oil in this State, as the availability of shark livers at present is not sufficient to warrant the starting of a factory. Action has however been initiated for obtaining an Actual Users' Import Licence for the purchase of machinery for the installation of Fish Meal and Oil Plants at Tuticorin, Nagapattinam and Cape Comorin sanctioned as a plan scheme. The Plants will be installed after the machinery is imported.

SRI. A. VEDARATHNAM : மீன் எண்ணெய் உற்பத்திசாலை ஒன்று இருந்தது. இப்பொழுது கேரளாவிற்குப் போய்விட்டது. நம் ராஜ்யத்தில் அந்த எண்ணெய் உற்பத்தி செய்வதற்கான தொழிற்சாலை எங்குமேயில்லை. எனவே அரசாங்கம் அதைக் கவனித்து இங்கு, எங்கேயாவது ஒரு தொழிற்சாலையை ஆரம்பிக்க முன்வருமா? அப்படியானால் அதன் விவரங்களை அறிவிக்க முடியுமா?

THE HON. SRIMATHI LOURDHAMMAL SIMON : இந்தத் தொழிற்சாலையை ஆரம்பிப்பதற்கு முப்பது டன் மீன் எண்ணெய் தேவைப்படுகிறது. இங்கு நமக்கு ஏறத்தாழ பத்து டன் தான் மீன் எண்ணெய் கிடைக்கிறது. ஆகவே, இதை கோழிக்கோட்டிற்கு அனுப்பிக்கொண்டிருக்கிறோம். விசைப் படகு வந்தபின்னர் அதிக மீன் எண்ணெய் கிடைக்குமாதலால் அரசாங்கம் வேறு தொழிற்சாலை ஆரம்பிக்க உத்தேசித்திருக்கிறது.

SRI P.G. MANICKAM : மீன் எண்ணெய் நமது ராஜ்யத்திற்கு அத்தியாவசிய தேவையாக இருப்பதால் அதற்கு ஒரு தொழிற்சாலை ஏற்படுத்துவதற்கு மூன்றாவது ஐந்தாண்டுத் திட்டத்திலாவது ஒரு திட்டம் வகுக்கப்படுமா?

THE HON. SRIMATHI LOURDHAMMAL SIMON : அதற்கு வேண்டிய மெஷினரிகளைக் கொண்டுவர அரசாங்கம் இப்போது முனைந்திருக்கிறது. அவை வந்தவுடன் இங்கு தொழிற்சாலை ஆரம்பிக்கப்படும்.

SRI A. A. RASHEED : May I know whether there are enough sharks in our State? (Laughter).

THE HON. SRIMATHI LOURDHAMMAL SIMON : For the moment we would be able to get only 10 tons of oil but by the use of mechanised boats, we hope to get more oil. Only in that expectation we are thinking of installing the plant.

SRI K. B. S. MANI : அரசாங்கம் நிறுவ யோசித்திருக்கும் அந்தத் தொழிற்சாலை எத்தனையிடங்களில் ஆரம்பிக்கப்படும்? அதற்கான மொத்தத் தொகை எவ்வளவு செலவிட அரசாங்கம் உத்தேசித்திருக்கிறது?

8th August 1960]

THE HON. SRIMATHI LOURDHAMMAL SIMON : நாகப்பட்டினம், தூத்துக்குடி, கன்னியாகுமரி முதலிய இடங்களில் ஆரம்பிக்க உத்தேசம். அதற்கு 6,400 பவுன் செலவில் மெஷினரிகள் வரவழைக்கப்பட்டிருக்கின்றன.

SRI A. GOVINDASAMY : இந்தத் தொழிற்சாலை நிறுவுவதற்கு மத்திய சர்க்கார் ஏதாவது நிதி தர ஒத்துக் கொண்டிருக்கிறார்களா ?

THE HON. SRIMATHI LOURDHAMMAL SIMON : தகவல் இல்லை.

*Andhra river waters for Madras*

MR. SPEAKER : Questions Nos. 25 and 26 will be taken up together.

* 25 *Q.*— SRI S. M. ANNAMALAI : கனம் பொது மராமத்து அமைச்சர் அவர்கள் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்குப் பதிலளிப்பாரா ?

(அ) 1960-ம் ஆண்டு ஏப்ரல் மாதம் 6-ம் தேதியன்று 134-ம் எண் கேள்விக்கு அளித்த பதிலையொட்டி கிருஷ்ணா, கோதாவரி, பெண்ணாறு ஆகிய ஆறுகளின் உபரித் தண்ணீரை நம் மாநிலத்திற்குக் கொண்டுவருவதைக் குறித்து ஆந்திர சர்க்காருடன் விவாதிக்கப்பட்டதா ?

(ஆ) அப்படியாயின், அதன் விவரம் என்ன ?

THE HON. SRI P. KAKKAN : (*a*) No, Sir.

(*b*) Does not arise.

* 26 *Q.*—SRI N. K. PALANISAMI, and SRI P. G. MANICKAM : Will the Hon. the Minister for Works be pleased to state—

(*a*) whether there has been any contract recently with the Andhra State regarding bringing of Andhra river waters to Madras; and

(*b*) if so, the details of the same?

THE HON. SRI P. KAKKAN : (*a*) No, Sir.

(*b*) Does not arise.

SRI M. KALYANASUNDARAM : கோதாவரி, கிருஷ்ணா ஆகிய நதிகளில் இருக்கக்கூடிய உபரி ஜலத்தை சென்னை ராஜ்யத்திற்குக் கொண்டுவரக்கூடிய திட்டம் ஏதாவது நமது அரசாங்கத்தின் பரிசீலனையில் இருந்து வருகிறதா ? அப்படியானால் அந்தத் திட்டத்தின் விவரம் என்ன ?

THE HON. SRI P. KAKKAN எற்கெனவே கிருஷ்ணா, பெண்ணாறு திட்டம் இந்த சர்க்காரால் பரிசீலிக்கப்பட்டிருக்கிறது. மொழி வழி மாகாணம் வந்தபிறகு மேலும கோதாவரி, கிருஷ்ணா